[6th February 1959

SRI A. VEDARATHNAM : கனம் அமைச்சர் அவர்கள் கொடுத்த பதிலில் சிறுபான்மையினரான சமூகத்தினருக்கு மிக அதிகமான அளவில் கிராண்டு வழங்கப்பட்டிருப்பதற்குக் காரணம் என்ன?

THE HON. SRI C. SUBRAMANIAM : அந்த சமூகத்தினர் அதிக அனுதை விடுதிகளை நடத்துகிறார்கள் என்பதைத்தான் இது காண்பிக்கிறது. மற்ற விடுதிகளில் அனுதைகள் அதிகமாக இருக்கக்கூடும். ஆனால் இவர்கள்தான் அதிகமான அனுதை விடுதிகளை நடத்துகிறார்கள்.

SRI K. B. S. MANI : அனுதை விடுதிகள் விஷயத்தில் கிருஸ்துவர்கள் தவிர, இந்துக்கள் போன்ற மதத்தினர் நடத்தும் விடுதிகளில் அந்த விடுதிகளில் நிர்வாகிகளின் சொந்தக்காரப் பிள்ளைகளும் வேண்டியவர்களும் அனுதைகள் என்ற பெயரில் பராமரிக்கப்பட்டுவருவது சர்க்காருக்குத் தெரியுமா? அப்படியானால் இதன்பேரில் தக்க நடவடிக்கை எடுக்கப்படுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM : இது சம்பந்தமாக கனம் அங்கத்தினரிடம் தகவல் ஏதாவது இருந்தால் அதை சர்க்காரிடம் அவர் தெரிவிப்பாரானால், அதன்பேரில் நடவடிக்கை எடுக்கலாம்.

SRI A. A. RASHEED : Is there any proposal to increase the grant to these orphanages?

THE HON. SRI C. SUBRAMANIAM : அது இப்போது தான் உயர்த்தப்பட்டிருக்கிறது. அது முன்பு 8 ரூபாயாக இருந்தது. 1—10—1958-லிருந்து அதை 2 ரூபாய் உயர்த்தி 10 ரூபாயாகக் கொடுத்துவருகிறோம்.

*Government dispensaries in South Arcot district*

* 67 *Q.*—SRI A. GOVINDASAMY (on behalf of Sri M. Jagannathan) : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the number of dispensaries run by the Government in the South Arcot district; and

(*b*) the number of Medical Officers in charge of them?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Three, Sir.
(*b*) One in charge of each dispensary.

SRI A. GOVINDASAMY : கண்டமங்கலத்தில் சர்க்காரால் நடத்தப்பட்டு வந்த ஆஸ்பத்திரியானது தற்சமயம் மூடப்பட்டிருக்கிறது. அதை மீண்டும் திறக்க சர்க்கார் உத்தேசிக்குமா?

THE HON. SRI M. A. MANICKAVELU : அது வேறு விஷயம் அதற்குத் தனிக் கேள்வி போட்டால் பதில் சொல்கிறேன்.

*Commercial Taxes Department*

* 68 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Industries be pleased to state the number of Deputy Commercial Tax Officers and Commercial Tax Officers employed in the Commercial Taxes Department on or after the 27th August 1958?